ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீமகாவிஷ்ணுபேரில்,

# நட்சத்திரமாலை.

வடக்காண்மணாநாடு

வெங்கடநாராயணஐயங்கார்

அவர்களால் இயற்றப்பட்டது.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியா ரவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,




தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# சாற்றுக் கவிகள்.

மாரியது வேபொழிய வேகநதி யேபெருகி வாழ்வுயர் குளம்பெருகியே
சிரிலகு நஞ்சையிரு போகமுற வேவிளைவு செல்வமிக வுந்தருகுமால்
காரிலகு சோலையினி லேகுயில்க ளும்பசிய காமர்மயி லுஞ்செரியுமால்
ஏரியுயர் வாகுமறை யோர்மருவு மான்மறைநன் றுடெனவு மொண்மை
[நகரே.

திருத்துளப மணியொளிசெய் கவுத்துவமு மணிமார்பன் செய்யவாச
மருத்துலவு சேடகிரி மாமாயன் றிருவடிக்கோர் மகிமைசேரும்
அருத்தியொடு திகழ்நட்சத் திரமாலை யணிந்தனனுன் மனைனு டென்றும்
உருத்திகழும் பதிமனையோன் வேங்கடநா ராயணனு முறுதியோனே.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீ மகாவிஷ்ணுபேரில்,

# நக்ஷத்திரமாலை.

## காப்பு.

எண்சீர்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருமருவிவாழ்கின்ற மணிகுகவனையிலே செய்யதாமரையலர்ந்து, திகழுமொருமாணிக்க மலைபோலவேநின்று திரைகொண்டவாரிபுடைசூழ், தரணிமிசையினிதான மெய்யன்பர்பிறவினோய் சாராதுகருணை புரியுந், தற்பராநந்தமய வைகுந்தனுதனிரு சரணமலரணியாகவே, புரிவினொடுகவிமாலை வல்லவானேகம் புனைந்திருந்ததுமுணர்ந்து, பூவிரவுநாறுமண மேவுமெனயாவரும் புகலுமொழியுறுதிகொண்டு, வரமிலகுசெந்தமிழினுடமாலையொன்றணிய வந்தெனதுசிந்தைமலரில், மகிழ்வாகநற்கிருபை செய்தருளவேணுநீ வகுளமலரணிமார்பனே. (க)

உன்பரமகல்யாண சாதுக்குணங்கள்சொலி யொருகணப்பொழுதாயினும், உருகிமகிழ்வோமென்று யோசிக்குமளவிலே யுடனேயெழுந்திருந்து, வன்பொறிகளானபல வாசல்வழிவினைவாக மருவினில்லாமலோடி, வம்புதருநெறியான காரியஞ்செய்கின்ற வஞ்சமனதைத்திருத்தி, என்கைவசம்நீதந்து உனதுதிருநாமங்க ளெப்பொழுதுமறவாமலே, யின்பமிருமன்பினொடு பாடிப்புகழ்ந்திடவு மிடர்வருமைவேர்களைந்து, அம்பொனிதிரவேணு மூரகவனைமாயனே யானந்தமானபொருளே, யலையாழிமேல்வந்த திருமாதுவளர்சந்த மணிமேவுமணிமார்பனே. (உ)

நலமானபுத்திபல போதித்தபோதிலிது ஞாயமென்றெண்ணினொடியில், நாயினுக்குண்டான குணமுமில்லாமலே நழுவிவிரைவாகவோடி, உலகமயலானவிருள் பொங்கிவிரிகின்றகட லூடேபுகுந்துதிரியும், உள்ளத்தைநல்வழி திருத்தியுன்திருநாம மோராயிரங்கள்முழுதும், மலியுமாநந்தமய மானவமிர்தம்பரவி வழிபப்புகழ்ந்துபாடி, வாழுந்திரத்தையருள் மாராபிராமனே மணிதங்குமணிமார்பனே, வலியமரமேழுந்துளைத்தரகுவீரனே மருவுகோதண்டபதியே, மருதொடியவந்துதவழ் மணிமேகவண்ணனே மணிகுகவனையின்முதலே. (௩)

மத்தகசமுன்சென்ற மரகதசொரூபனே மணிதங்குமணிமார்பனே, மாதவர்கள்முதலான யோகியருமொருநாலு மறைகளுந்தேடியுணரா, மெய்த்தனிச்சுடர்பொங்கி யவியாதுவளர்கின்ற மெய்ஞ்ஞானதீபவொளியை, வீறுதருசெம்பொன்மய மானதொருவண்பரவை மீதினிலெழுந்தடியவர், பத்தியொடுகண்டுதொழ முத்திதரவந்தருள்செய் பரிமளானந்தவமுதை, பனிவரையினதிபதியை யெனதிதயமிவிமையொடு பரிவுரனுகர்ந்தினிமேல், மொய்த்தெழுமனேகவன மூளதுபலகாலேது மூரண்வமாகள்யெங்குமுளதால், முடிவிலதிலேசுங்கள் பெனமருவிவாழ்கின்ற மோகவயல்வன்பிணிகளே. (௪)

உலகமறிவேயதிக செல்வத்தையடையினு மொழியாதவருமையுரினு
ம், உல்லாசமங்கையர்கள் சல்லாபமோகவிரு ளூடேபுகுந்துழலினும், சல
மேபுரிந்துபிணி யுடலத்தைவளையினுந் தந்திகள்விரட்டிவரினும், தணல்
மண்டியெரிகின்ற விடம்பெருகிசையில்வாழ் சர்ப்பங்களெதிர்சீறினும், சில
பேர்கள்கண்டிமெச்சுமெ புகழினும்பலபேர்கள் சீயென்றுதானிகழினும், திர
மாகவுனையன்றி வேறொன்றுசனவிலுஞ் சிந்திப்பதில்லையதனால், ஒளிகொ
ண்டுகேடிலொழ்ற பாவிவருநாளிலே யுனதுதிருநாமங்களை, உள்ளத்திலன்
பாய் நிலைக்கவந்தருளுவா யுரகவரைநின்றமுகிலே. (ரு)

நூறாயிரங்கிரண ரத்நவொளிநிறைசெறாறு முதயரவிபோல்விளங்க,
ஒருநாகவணையினிற் பாலாழிநடுவிலே யுறயோகநித்திரைசெயும், பேராயிர
ம்பெறுசரோருகவிலோசனு பிறைதங்குவேணியரனும், பிரமனுடுவானி
லுறைமிந்திராதிதேவரும் பிரியமுடனேவணங்க, நேராயிரங்கியெமை யா
ளென்றநாளிலே நீவந்துகாத்தருளினாய், நெடிதானமணியுரக வடிவானம
லையிலே நிலைத்தவதரித்தாய், யோராயிலங்குனது பாதமலர்நினையாமல்
இடர்வருமைகொண்டுமெலியும், இதயத்தைநல்வழி திருத்தியருள்புரிகு
வாயினிதானபரமகுருவே. (சு)

பொங்குதிரைவீசிவரு கங்கைநதிமுதலான புண்ணியதீர்த்தங்களா
லும், புனிதமயமானசில வோமங்களெய்யவிச பொழிகின்றவேள்வியா
லும், அக்கியிடைநின்றுபொறி யைந்தையுமடக்கிமன மசைவறநிருத்தலா
லும், அலையாழிசூழ்கின்ற பூலோகமுழுதுமுலவ மாகவேவந்ததாலும், இங்
கிதமிகுந்தபல தானதருமங்களை யியற்றுகிறதன்மையாலும், இமையவர்க
ள்வடிவாக வுடல்மாறுமேயலது யிடர்பிறவிதீர்வதில்லையால், பங்கயங்கமழ்
கின்றசேஷகிரிமீதில்வாழ் பச்சைமுகிலைப்புகழ்ந்து, பணியுங்களினிதான
முத்தர்வடிவாகவீர் பரமபதவாழ்வுபெறவே. (எ)

திருமங்கைவாழ்கின்ற மார்பமுங்காதிலணி தெய்வபொற்குழையினழ
கும், திவ்யபரிமளமான மாலையணியொருகோடி செய்யசூரியப்ரகாசம்,
பெருகிவளரத்னமணி மவுலியுமரையிலணி பீதாம்பரத்தினழகும், பிழையி
லாதடியவர்கள் பரமபதவாழ்வினிது பேணியருள்கருணைவிழியும், பரிதிவ
ளைமுதலான பஞ்சாயுதங்களும் பங்கயக்கையிலங்கட், பசியமரகதமேனி
யெங்கும்துலங்கிடப் பரவையின்படரேரியென், இருவிழிகுளிர்ந்திதய மா
னந்தமாகவே யென்றுவந்தருள்புரிவையோ, இமையவர்களறியாத வுரக
வரமாயனே யெதிராசர்புகழ்சிங்கமே. (அ)

பங்கயமலர்த்தெரிவை சிங்காரனேயனக பச்சைமாணிக்கமலையே,
பஞ்சமாபாதகர்க ளாயினுஞ்சாமதிசை பண்பாகவுனதுநாமம், அங்கவர்கள்
நாவில்வருமாகிலஞ்சேவென்று அனந்தவெள்ளமயமாய், அருள்சுரந்தேவி
ழிகள் பொழியவேயெதிரில்வந் தழகானசேவையருளி, அங்கைமலர்கொ
ண்டவரை யன்போடணைத்தினிய அமுர்தவசனங்கள்கூறி, அணிபரமவீடு
தருமுனதருமைதனையளவு மறியாமலேமறந்து, மங்கையர்கள்மோகவலை
யூடேபருந்துபிணி வருமையதனுல்மெலிந்து, வாடுமென்சிந்தைபுனிதடியி
னைவழுத்தவருள் மணநாகவரையின்முகிலே. (கூ)

நிலையிலாவுடலத்தை நிலையென்றநம்பியே நிதிறிவாழ்கவென்று, நேச
மொருமனைவாழ்வை நிசமென்றுவெண்ணியே நிலமெலாந்திரிந்து, உல
விலாமிக்கபொருள் தேடிவருமாசையால் உழல்கின்றபவநெஞ்சமே, உணை
கள்தடுமாறியுயிர் விடுகின்றநாளிலே யுற்றதமர்துணையாவரோ, கலகமிடு
படைவீரர் புடைசூழவிரைவோடு காலனெதிராகிவந்து, கதிர்மேவுதிரிசூ
லம் வளர்பாசமுதலான கைப்படைகள்விடுமுன்னமே, மலிகின்றமலர்வாச
மதுவுண்டுகிளைவண்டு மதுரங்கிதங்கள்பாடும், வளமானவுரகவனமேனின்ற
மாதவனை வாழ்த்திடுவைதுணையாகவே. (௧0)

பாவையர்கள்விடுமோக சண்டிப்பிசாசினைப் பரிசுத்தமாய்விளக்கும்,
பாகானபேரறிவு மந்திரத்தாம்பினிற் பலமாகவேபிணித்துத், தாவியோடா
தவகை நேராயிறக்கியொளிர் சாந்தமெய்ஞ்ஞானவனலிற், குனிட்டெறித்
துனது பாதமலர்மறவாத நற்குணமெனக்கருளுவாய், பூவளரும்பஞ்சதரு
வாழ்கின்றபொன்னுலகற் பொங்குகடலாடைபுடைசூழ், பூமண்டலத்தலை
வர் யாவருமவரவர்கள் புந்தியினினைத்தபடியே, ஆவலொடுகொண்டுதொழ
வுரகவனமேனின்ற அச்சுதானந்தமயமே, அடியவர்கள்மனதிலுறை மெ
ய்ஞ்ஞானதீபமே ஆனந்தசுகுணமுகிலே. (௧௧)

திரைகொண்டகடலாடை யுலகத்திலேயதிக செல்வத்திலேமகிழ்ந்து,
தெரிவையர்களதிமோக வலையினிற்சிக்கியவர் சிரியோனியளறின்மூழ்கி,
நரைகொண்டுவுடல்கூனி சிரசுகிடுகிடெனவே நாட்டவொளியதுமயங்கி,
நாவுதடுமாறியுயிர் விடுகின்றநாள்வரையும் நாடிமனைவாழ்வின்முயல்வீர்,
நிரைகொண்டபடைவீரர் புடைசூழவிரைவோடு நீவிர்கள்வளைத்திழுத்து,
நிட்டூரமானகொடு நரகத்திலேதள்ளும் நேரத்திலென்செய்குவீர், விரை
கொண்டசெங்கமல மலர்கின்றசேஷகிரி மேனின்றகரியமுகிலின், மிளிர்
கங்கைவழிகின்ற கழலிணையைநாடோறும் விரும்பாததமிழ்வாணரோ. ()

சிந்தையினிலன்பாக நின்னடியர்பாததூள் சிரசிலணியாதபாவி, செ
யல்தங்குபாகவதர் சேவைகொண்டவர்பாத தீர்த்தமுண்ணாதபாவி, திந்திர
ணிவளர்மாறன் வந்தருளுமூர்வலஞ் செய்யாதகொடியபாவி, திவ்யப்ரபந்த
காலக்ஷேபமகிமையைச் செவியிலேலர்க்காதபாவி, மைந்தரொடுமனைவாழ்
வை யுறுதியென்றெண்ணியே வாஞ்சையதுகொண்டபாவி, வானத்திலிடு
மின்னல்போலழியும்முடலினை வலுவென்றுணர்ந்தபாவி, வெந்துயரகற்
றியெனை யாண்டருள்வையோநரகில் வீழ்விப்பையோவறிகிலேன், மிளிரு
மணியுரகவெற்புறைகின்றசோதியே மெய்ஞ்ஞானதீபமயமே. (௧௩)

மகமேருகிரிபோலு முயர்தேறின்மிசையேறி வடிவாளிமழைசொரி
ந்து, வலிமேவுபகையாள றுடல்வீழவமர்றுறி மணிவாகையேபுனைந்து, புக
ழேறுமணிநக வரையேறிநின்றதொரு புயலைப்புகழ்ந்துபாடிப், பொங்கு
நிதிமுதலான செல்வஞ்செழித்தெழில் பொருந்தினன்விளங்கியதனுல், நக
னேருபுயவீர மிகுராமதரூப ஞாலந்திலிந்திரயோக, நரபாலனையென்று
புல்லரைத்துதிசெய்து நாடோறுமேயிரந்து, துகளானவிருள்மூடு பலகோ
டிநரகேரு சகியேயிலதபுலவீர், சுகஞானவடிவாகு மவனைப்புகழ்ந்துகவி
சொல்லுங்கடியர்திரவே. (௧௪)

அடல்கொண்டகோபனென் றுனைபெற்றவொருசூ ரூரவாரித்தெழுந்து, அண்டகோளத்திங்கிசை பொங்கியனல்முட்டுறவதட்டிக்கிளம்பியெதிரோ, கடைகொண்டசார்ங்கமெயெடுத்துவிண்விசியே ஞாயனைப்பற்கள்சிதற, ஞாலத்தின்மேல்விழ வுதைத்தேவிபேவகனை நடுக்குறமுடிக்கிவினைவிற், கொடிகொண்டவொருபங் கவனோயிக்கறுகாது கிமுறவொடிக்கியென்றன், சேதமற்றனது திருநாமத்தையேசொலக் கிருபைபுரியுரகவரைமேல், குடிகொண்டுவாழ்கின்ற மணிமேகவண்ணனே கொற்றமணிமாலையணியுங், கோதண்டமுதலான பஞ்சாயுதங்களுங் கொண்டபிரண்டமுதலே. (கரு)

முத்தலமிகுத்தெரியு வர்க்கடலெறிதணிய முறட்சிலைவளைத்தமுடுகி, முக்குணமுமுத்தொழிலு முப்பொழுதுமுப்பொருளு முற்சுடருமுத்தலமுமாய், உத்தமறைதத்தமுத மொத்தமொழியத்தனிட ரூற்றசமயத்திலருளி, உச்சிதமணித்திரள் குயிற்றியாதத்தினை யுறத்துடனடத்தியரவின், பைந்தலைநடித்திருமரத்தினையொடித்துயர் பருப்பதநிகர்த்தகரியைப், பற்றியவிடக்களை யருத்திரிமறைத்தமர் படைக்கலமெடுத்தமுகிலே, சந்திமுதலெத்தவரு முத்திபெறநற்றுதிசெய் தத்தையுணாமொய்த்தபொழில்சூழ், சர்ப்பகிரிநிற்கும்வண சத்திருமகட்கினிய தற்பரவிரத்னவொளியே. (கசு)

மாறுநாமுகிறுவ மாறுகமீதிறத மதவேழவைம்பகழியை, மதவேழமாறவனா மணிவேழம்வல்பரவை வளரலகையலைகமுலையை, வாறுகவந்திகழும் வடிவாளியேவியணி மருவுநடனம்புரிந்து, மகிழ்வுறவழங்கிவிழமோதியெருகைமிசை வயந்தருடையாகநிறுவிக், காறுகணங்குவிய வெதிருசிவகிர்செய்து காதலுடனேயருந்திக், கந்தமலியுங்குமுத முண்டகம் வலம்புரி கருங்கயிறைந்தகுளமும், தேனுகவன்பொழிலு மணியாய்விளங்குமணி சேஷாசலத்திலுறையுஞ், சீதாபிராமனின் பாதாரவிந்தமலர் சிந்தித்துவாழ்வாமரோ. (கஎ)

இரவிநீமதியுநீ மண்ணுநீவிண்ணுநீ யெரியுநீகாலுநீயே, இன்பநீதுன்பநீ கஞ்சநீயமுதநீ யிக்கிராதிவானவருநீ, கருணைநீவெகுளிநீ வஞ்சநீதஞ்சநீ காமநீகுணநீயே, கமலநீபிரமநீ நரகநீவீடுநீ கண்ணுநீமனமுநீயே, தருமநீவாமுநீ பாவநீபுண்யநீ சகலகலைவல்லமையுநீ, சத்யநீபலகோடி அண்டபகிரண்டநீ தானிலாயிடமில்லையால், உரமாகநின்மகிமை யறியவென்றாலுநீ யுள்ளிருந்துணர்வதல்லால், உகநாறுசொல்லிறு நாமெனன்பருணர்வரோ வுரகவரைநின்றமுகிலே. (கஅ)

உற்றவுடல்நிலையென்று மக்கள்மனைதுணையென்று வோகைவுல்லாசமாகி, ஒசைப்பெருங்கடலி னுசைப்பிசாசுபல வோடிவந்தேயலைக்க, நற்றதிறமெதிர்பேசி நானென்றவாண்மையொடு காசினியெலாந்திரிந்து, கனமானநிதிதேடி வீணிலேகாலங் கழிக்கின்றமூடமனமே, வெற்றிகுருபிறைவேணி நற்றெரிவையொருபாகம் வெந்துயர்தவிர்த்தமுதல்வன், வினாதங்குசெங்கமல மலர்கின்றசேஷகிரி மேவின்றதரியமுகிலைக், குற்றமறவேயந்திகாலையினிலாயினுங் குணமாகவேவிரும்பிக், கோதிலாதவநாம மென்றுமிலுஞ்சொலாய் குறைவினறிவாழ்வுபெறவே. (ககூ)

உரககிரிமெய்ஞ்ஞான தீபவொளியேசுருதி யுணராதமிக்கபொருளே, ஓலைதருவிசுவாச பாகவதருள்ளம்விட் டொருகணப்பொழுதுமகலாய், பரமகல்யாணகுண சுசீகரவசீகர பயோதரங்கர்த்தவடிவே, பரிமளசுருகவிலோசனகிருபாநிதி பணைமிசைநடனமிடுமுன், இருசரணமலரின்மன மனல்மெழுகுபோலுருகி இனிமையொடுபுகழாயலே, இருவுசும்புலவுமினல் நிலலைதவுடலைநிலை யென்றுபொறிதுன்றுமயலால், மருவிமனைவாழ்வென்ற விரிகடலிலேமுழுகி வாடியிரைதேடியுழலும், வஞ்சகனையஞ்சலெனவந்துநின்றுள்வையோ மறுசனனம்வாராமலே. (௨௦)

கார்கொண்டகடலாடை சூழ்கின்றவுலகிலே கடுவைரிகாரமூடர், கபடத்தையுட்கொண்டு நல்லவர்கள்போலவே கனிவாகவந்தடுப்பார், நேர்கொண்டசகலகலை வல்லவர்கள்போலவே நீதிவசனங்கள்சொல்வார், நேசமொடுநண்பாகி வாழ்கின்றபேர்களை நிமிஷத்திலேபிரிப்பார், பேர்கொண்டநிதிபெருகி வளர்கின்றகுடிகளைப் பேணுமேலகலைத்தறப், பேதகம்பலசெய்து கலகத்தைமூட்டியே பின்னப்படுத்திவிடுவார், பார்கொண்டசுமையாகு மங்கவரையணுகாது பரிவாகுமுனதுதொண்டர், பாதமலர்புகழ்கின்ற நல்லறிவுதருகுவாய் பணிநாகமேவுமுகிலே. (௨௧)

தொண்டர்கள்மனத்திருளை வேரோடெரிக்கின்ற சுகஞானதீபவொளியைத், துளபனறுமாலையொடு மணியணியுமார்பனைச் சொர்ணமுடிவர்ணமணிகள், மண்டுகிரணம்பரவு மெங்கதிரொளும்படி வயங்கவுமரங்ககரில், மஞ்சறவமென்றதொரு பஞ்சணையிலேதுயிலும் மாகதநெடுங்கிரியினை, தெண்டிரைமிகுங்கடல் கடைந்தமுதுவண்டருஞ் செழித்துவளர்கின்ற வுலகில், தேவர்கள்மகிழ்ந்துண வளித்தணிப்புரிந்தனி செழுங்கமலவண்ணமலருங், கண்டமலருங்கமிழு முரகமணிவரையில்வாழ் கருணையங்கடலையினிதா, கண்டுபணியாதவர்கள் சன்மப்பெருங்கடல் கடந்துகரைகாணார்களே. (௨௨)

தாரணியில்வாழ்கின்ற மானிடர்கள்யாவருஞ் சந்தோஷமருவினாலும், தன்மையொடுகொண்டாட நற்றமிழெனக்குநீ தந்திருந்ததுமுணர்ந்து, தாரணியுனின்பாத மலர்களைப்புகழாது சகவாசதோஷமதினால், சற்குணமிலாதபல மூடரைப்பாடித் தரித்திரம்விளைந்ததல்லால், ஏரணியுநன்னிதியம் வந்ததிலையாதலால் இதுபெரியகுற்றமாகும், இதையத்திலெண்ணமலன்புவைத்தருளியென் யிடர்வருமைதீர்க்கவேண்டும், வாரணியுமுலைதந்து காக்கின்றதாயலால் மைந்தர்பிழையெவர்பொறுப்பார், மணிநாகவரையிலுறை யச்சுதாநந்தனே வனமாலையணிமார்பனே. (௨௩)

மன்றலணிகொன்றைமலர் மானவிசெழுந்திரை வளர்ந்தசடைமேலணிந்து, மங்கையொருபாகத்தில் வைத்தகயிலாசபதி வன்றுயரகற்றவிலையோ, துன்றிமணியொளிர்கின்ற தூணடுவிலேவந்து சுதனைமுன்காக்கவிலையோ, துங்கமதமால்களிறு மூலமெனவோருரை சொலும்பொழுதுவந்திலையோ, வென்றிவடிவேலரசர் கூடியசபைக்கணனில் மீதினிலுதித்தவெழில்சேர், மின்னினிடையன்னநடை மாதினுக்கருள்செய்து மெய்த்துயில்வழங்கவிலையோ, என்றன்வறுமைப்பிணி யகற்றிநிதிதருகுவாய் இதுவுனக்கரியதோசொல், இந்திரைமகிழ்ந்துலாவு மார்பனேயுரகவரை யெழில்மேவுவிமலமுகிலே. (௨௪)

சங்கமணிவார்கொண்ட பேரிகைத்துமிமுரசு தவில்பம்பைமேளமுழவம், தானமொடுவளைகொம்பு பிட்டில்தம்புருவர்ன சாரங்கிசின்னமுதலாய், மங்கலவுலாசமணி நாகசுரம்வீணைசுர மண்டலங்கவுரிகாளம், மருவியெழுகின்றபல காதகீதத்தொனிகள் மாதிரமெலாம்விளங்க, நங்கையர்கள் பரதமுறை தவிராதநடனமிட நறுமலர்சொரிந்துபிரமன், மற்றெரிவையொருபாகன் வானவர்தபோதனர்கள் நாடொறும்வணங்குமலையே, கங்கைநதிமுதலான புண்ணியதீர்த்தம்பரவு கமலநிறைகோனேரிசூழ், கந்தமலிபைந்துளவ மாலையணிபார்பனுறை கனமேவுமுரகவரையே. (உரு)

வானகந்தனின்மேவு தாராகணம்பருதி வாழியஞ்சுடராகுமோ, வனமூடுதிரிகின்ற புன்சிறியமிருகங்கள் வாளரிக்கிணையாகுமோ, மானிலமுழைந்தபல கல்லெலாங்கூடியொரு மாணிக்கநிகராகுமோ, வன்பறவையென்றுசொலும் வர்க்கங்களதிவேக வண்கருடனேராகுமோ, தானவர்குலங்களை யறுத்துமணிவாகபுனை சர்ப்பகிரிநின்றமுதல்வன், தாளிணையைமறவாத தொண்டருக்கடியவர்கள் தாசருக்கொப்பாவரோ, கானலர்செழுங்கமல மீதிலுறைவேதனொடு கங்கையணிவேணியனகன், கடமாமுகத்தனயில் வீரனதிதவையோக கானில்வளர்முனிவோர்களே. (உசு)

வெற்றிரல்மிகுந்தசின மீறிவருமல்லனை மிதித்தமர்விழைச்சாடியே, வெண்ணியவலம்புரியெடுத்தலையெரிந்துவரும் வேலைகனிவேகவேக, முந்தபகழிக்குல முடிக்கிமருகாந்தனை முருக்கியொருவேனவடிவாய், மொய்த்தலமருப்பினிடை வைத்தபுகழ்பெற்றசெய மூர்த்தியிடமாம், இந்துபுனையுஞ்சடில னும்பிரமனுக்குகனும் யிந்திரனும்விண்ணவர்களும், இன்பமுயரன்பினொடு கந்தமலிபைந்தரு விசைந்தமலர்கொண்டுபணியும், மந்திகனிசிந்தரச முந்திவழியுப்பரவி மஞ்சிதவழ்கின்றபொழிலும், வண்கமலமுங்குவளை யிங்கமழ்தடங்களும் வளைந்தணிகொளுகமலையே. (உஎ)

மருமண்மெதுவுண்டு இளவண்டுமகிழ்கொண்டு மதுரராகங்கள்பாட, வர்ணப்பசுஞ்சிறை விரித்துமயிலாடவே வண்குயிலினிசைகூடவே, திமுந்திமந்திகள் வருக்கைப்பழங்கொண்டு செயமத்தளங்கள்போடும், சீதமுகில்தவழ்கின்ற சேடகிரிமீதில்வாழ் சீதரனையாதரமுடன், இருதயந்தனிலுன்னு மறவாதபாகவதர் யிணையடிக்காளானவர், இருசரணமலர்களைச் சிரசிலணிவோர்கள்தான் இந்திரனும்வானவர்களும், பிரமனுங்கயிலாச மலையிலுறைஈசனும் பேர்பெற்றமுனிவோர்களும், பிரியமொடுகொண்டாட மேலானவுலகிலே பெருமையுடவாழ்வார்களே. (உஅ)

ஸ்ரீநிவாசன் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

ஸ்ரீமகாவிஷ்ணுபேரில்,

நக்ஷத்திரமாலை,

முற்றிற்று.